# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 8 | அக்டோபர் 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 8 | October 10th, 2019 | Annual Subscription Rs. 100/-



புரிந்த பிறகும்
பிரச்சினையா?

பகவத் பாதை தமிழ் மாத இதழ்



நம் அகத்தை – மனதை சீரமைக்க தேவையில்லை என்ற முடிவுக்கு வருவதுதான் ஞானம்.

உங்களை முழுமனதுடன் ஏற்றுக் கொள்கிறீர்களா? அல்லது உங்களை நல்ல நிலைக்கு சீரமைக்க விரும்புகிறீர்களா? என்பதுதான் கேள்வி.

"இல்லை இல்லை என்னை நான் நன்றாக வைத்துக் கொள்ள வேண்டும்" என்று எண்ணுபவர்கள் மட்டுமே நமது அணுகுமுறையை புரிந்து கொள்ளாதவர்கள்.

நமது குறை நிறைகளை முழுமனதுடன் ஏற்றுக் கொள்பவர்கள் மட்டுமே அகச் சரணாகதிக்கு வருகிறார்கள்.

– ஸ்ரீ பகவத்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்கள்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


| நாள் | விபரம் |
|---|---|
| 10.10.2019 காலை 11.00 மணிமுதல் 13.10.2019 மதியம் 3.00 மணிவரை | 4 நாள் ஞான முகாம் இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். |
| 15.11.2019 மாலை 5.00 மணிமுதல் 17.11.2019 மதியம் 3.00 மணிவரை | 3 நாள் ஞான முகாம் இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். |

செலவு பகிர்வு ரூ. **3000/-** மட்டும்.

செலவுப் பகிர்வு கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.

**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**





# புரிந்த பிறகும் பிரச்சினையா?

- ஸ்ரீ பகவத்

"நீங்கள் கூறுவது எனக்கு விளங்கி விட்டது போல் தான் தோன்றுகிறது. ஆனாலும் எனக்குள்ளே எங்கேயோ எதனையோ தவறவிட்டுவிட்டது போல் தோன்றுகிறதே? எதை எப்படித் தவற விட்டு விடுகிறேன் என்பது புரியவில்லை. நான் என்ன செய்ய வேண்டும்?"

–சமீபத்தில் ஐதராபாத் சென்றிருந்தபோது அன்பர் ஒருவர் இவ்வாறு கேட்டார்.

இத்தகைய கேள்வி பலரிடமும் உள்ளது.

இதுவும் ஒரு வகையான பிரச்சினை தான். இது என்ன வகையான பிரச்சினை?

அவர் புரிந்து கொண்டிருக்கிறாரா?

அல்லது அவர் புரிந்து கொண்டிருக்கவில்லையா?

புரிந்துகொண்டு விட்டோம் என அவரே எண்ணுகிறார். பிறகு எதையோ தவற விட்டு விட்டதாகவும் எண்ணுகிறார்.

இங்கே என்ன நடந்துள்ளது?

இங்குள்ள பிரச்சினைதான் என்ன?

சற்று நேரத்திற்கு நாம் அவரையும் அவருடைய பிரச்சினையையும் மறந்து விடுவோம். ஒரு சராசரி நபருக்கு ஏற்படும் சாதாரண பிரச்சினையைப் பற்றி முதலில் பார்ப்போம்.

பொதுவாக நாம் எடுத்துக் கொண்டால் ஒரு சராசரி மனிதர் ஒருவருக்கு ஏற்படும் பிரச்சினை என்ன?

பிரச்சினையான சூழ்நிலையில் அவர் வாழ்ந்து வரலாம். வேலை செய்யும் இடத்தில் அவருக்கு பிரச்சினைகள் ஏற்படலாம். அதேபோல் குடும்ப உறவுகளிடையே அவருக்குப் பிரச்சினைகள் ஏற்படலாம். தொழில், வருவாய், கொடுக்கல் வாங்கல் என பல அம்சங்களில் ஒருவருக்குப் பிரச்சினைகள் ஏற்படலாம்.

செயல் அளவிலான பிரச்சினைகளுக்கு செயல் அளவில் தான் தீர்வு காண வேண்டும்.

பசி என்பது செயல் அளவிலான பிரச்சினை. உணவை எடுத்துக் கொள்வதுதான் செயல் அளவிலான தீர்வு.

செயல்களின் மூலமே செயல் ரீதியான பிரச்சினைகளைச் சந்திக்க முடியும். இதில் எவருக்குமே மாற்றுக் கருத்து கிடையாது.

நமக்கு ஏற்படும் பிரச்சினைகளை நாம் நம் மனதின் வழியாக எப்படி எதிர்கொள்வது என்பதுதான் மனோ ரீதியான பிரச்சினை.

நமது புறப் பிரச்சினைகள் அனைத்தும் நமக்கு மனரீதியான பாதிப்புகளையும் ஏற்படுத்துகின்றன. அந்த மனரீதியான பிரச்சினைகளுக்கும் நாம் தீர்வு காண வேண்டியது அவசியமாக உள்ளது.

மனோரீதியான தீர்வு என்றால் என்ன?

மனதளவிலான நமது செயல்பாடு திருப்தி இல்லாமல் இருந்தால் அதுதான் அகப் பிரச்சினை.

மனதளவில் திருப்தியாக செயல்படுவது என்றால் என்ன?

நாம் ரயில் பயணத்துக்கு அல்லது விமானப் பயணத்திற்கு முன்பதிவு செய்து கொள்ளலாம். அதன்படி நமது பயணத்தையும் மேற்கொள்ளலாம்.

இப்படி நாம் நமது வாழ்வில் செய்து முடிக்க வேண்டிய பணிகளை திட்டமிட்டுக் கொள்ளலாம். அப்படி திட்டமிட்டுச் செயல்படுவதுதான் சரியாக இருக்கும்.

இப்படி நாம் நம்முடைய அக இயக்கத்தைத் திட்டமிட முடியுமா?

நாம் விரும்பக்கூடிய உணர்ச்சிகள்தாம் நமக்கு ஏற்பட வேண்டும்; நாம் விரும்பாத உணர்ச்சிகள் எவையும் நமக்கு ஏற்பட்டு விடக்கூடாது

– என்று நமது மன இயக்கத்தையும் கட்டுப்படுத்தி வைக்க முடியுமா?

யோக சாதனைகள் மூலம் நமது உணர்ச்சிகளின் செயல்பாடுகளை ஓரளவு

கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியும். ஆனால் அதுவும் கூட ஒரு விதமான வன்முறைதான் என்பதையும் அது நிரந்தரத்தீர்வாகாது என்பதையும் நாம் நம்முடைய கருத்தாக பல இடங்களில் பார்த்து விட்டோம்.

நெறிப்படுத்துதல் என்னும் வன்முறை அணுகுமுறையை மேற்கொள்ளாமல் இங்கு நாம் என்ன செய்ய வேண்டும்?

அகத்தளவில் நாம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

காட்டாற்று வெள்ளத்தில் ஒரு மானும் அதனுடைய இரண்டு குட்டிகளும் மாட்டிக் கொண்டு விட்டன.

அவை எப்படியோ சிரமப்பட்டு வெள்ளத்தின் பிடியில் இருந்து தப்பி வெளியே வந்தன.

"அப்பாடா! நாம் நான்கு பேர்களும் எப்படியோ தப்பிவிட்டோம்", என்று மான்குட்டி ஒன்று கூறியது.

மான் குட்டி ஏன் அப்படிக் கூறியது?

அங்கு இருந்தவை எத்தனை?

தாய் மான் ஒன்று, குட்டி மான்கள் இரண்டு என மூன்றுதான் அங்கிருந்தன. பிறகு ஏன் "நாம் நான்கு பேரும் தப்பி விட்டோம்" என அந்த குட்டி மான் கூறியது?

ஜோக் சொல்லுபவர்கள் இப்படி ஒரு மான்குட்டி கதையைக் கூறுவது உண்டு.

நாம் நமது கணித வல்லமையை எல்லாம் காட்டி இதற்கான பதிலைக் கண்டுபிடிக்க வேண்டுமா?

இது உண்மையில் ஒரு ஜோக் தானே தவிர இது கணிதத்தை போதிப்பதற்கான கேள்வியல்ல.

இதற்கான விடை என்ன?

அங்கு இருந்தவை உண்மையில் மூன்று தான். தாய் ஒன்று குட்டிகள் இரண்டு என மொத்தம் மூன்றுதான் இருந்தன.

அந்தக் குட்டிகள் விவரம் இல்லாதவை; படிப்பறிவு அற்றவை. ஆகவே அந்த குட்டி விவரம் இல்லாமல் "நாம் நான்கு பேர்களும் தப்பி விட்டோம்" என்று தவறாகக் கூறிவிட்டது.

– இப்படி அந்த ஜோக் கூறப்படுகிறது.

அகத்தளவில் நாம் இலக்கண சுத்தமாக நடந்து கொள்ள வேண்டுமா?

அல்லது நாம் அகத்தை சுதந்திரமாக விட்டு வேண்டுமா?

– இதுதான் கேள்வி.

அகத்தைப் பொறுத்தவரையிலும் நெறிமுறைகள் அனைத்தும் சிறைச்சாலைகளே.

அகச் செயல்கள் அனைத்தும் இயற்கையானவையாகவும், சுதந்திரமானவையாகவும் இருப்பதே சரியானவையாகும்.

நெறிமுறைகள் அனைத்தும் அவற்றின் இயற்கைத் தன்மையை குலைத்து விடும்.

நம்முடைய அகம் நன்றாக இருக்க வேண்டும் என்பதிலும் நமக்கு மாற்றுக் கருத்து எதுவும் கிடையாது.

ஆனால் நாம் எதையாவது செய்து நாம் நமது அகத்தை – மனதை நல்ல நிலையில் வைக்க வேண்டும் என்ற அணுகுமுறை நமக்குக் கிடையாது.

நமது அகத்தைப் பொறுத்தவரையிலும் செய்வதற்கு எதுவுமே இல்லை. அதை நாம் முழு சுதந்திரமாக விட்டு விட்டால் போதும்.

ஆனால் பாரம்பரிய முறைகள் அப்படி இல்லை. அவை பலவிதமான பயிற்சிகளைக் கொடுத்து இருக்கின்றன. ஆன்மிகப் பயிற்சிகள் என்றாலே அவை அனைத்தும் அகத்தைச் சீரமைக்கும் பயிற்சிகளே.

அந்தப் பயிற்சிகளின் மூலம் முன்னேற்றம் ஏதும் கிடைக்காதா?

நிச்சயம் முன்னேற்றம் கிடைக்கவே செய்யும். அதில் எந்தச் சந்தேகமும் கிடையாது.

ஆன்மிக சாதனைகளில் ஈடுபட்டுவரும் ஓர் ஆன்மிக சாதகரையும், ஒரு சராசரி மனிதரையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

ஆன்மிக சாதகருடைய வாழ்க்கை முறையானது ஒரு நெறிமுறையோடு அமைந்திருப்பதைப் பார்க்க முடியும். ஒழுக்க சீலனாகவே அவர் காட்சியளிப்பார். மற்றவர்களுக்கு ஒரு முன்னுதாரணமாக அவரது வாழ்க்கை அமைந்திருக்கும்.

ஆன்மிக சாதகருக்கென்று ஆன்மிகத்தில் பல விதமான நெறி முறைகள் வகுக்கப்பட்டுள்ளன.

அதிகாலையில் துயில் எழ வேண்டும். தேவையற்றவைகள் எவற்றையும் அடுத்தவரிடம் பேசக்கூடாது. அனைவரிடமும் மென்மையாகவும் கருணையுடனும் நடந்து கொள்ள வேண்டும். புலன் இன்பங்களில் ஈடுபாடு காட்டக்கூடாது. ஆணவமான வார்த்தைகளை பயன்படுத்தக் கூடாது. மென்மையான சொற்களையே பயன்படுத்த வேண்டும்.

– இப்படி அவர்களது வாழ்க்கையானது எத்தனையோ விதமான கட்டுப்பாடுகளால் நெறிப்படுத்த பட்டிருக்கும்.

ஆன்ம சாதகர்களும் இத்தகைய நெறிமுறைகளை வெற்றிகரமாக செயல்படுத்தும் வரையிலும் தாங்கள் தங்களது பாதையில் முன்னேறிச் செல்வதாக உணர்வார்கள்.

வெற்றி பெறாத நிலையில் குற்ற உணர்வுக்கு ஆட்படுவார்கள்.

நெறிமுறைகளை சரியாக பின்பற்றாததாலும், தவ தியானங்களில் சரியாக ஈடுபடாததாலும் தான் தாங்கள் இன்னும் ஞானம் அடையவில்லை என்று எண்ணி வருவார்கள்.

விளைவாக மேலும் மேலும் தங்களோடு போராடி தங்களை நெறிப்படுத்துவதிலேயே கவனமாக

இருந்து வருவார்கள்.

அவர்கள் ஞானம் அடையாவிட்டாலும் கூட அவர்கள் அனைவருமே ஒழுக்க சீலர்களாகவும் பண்பாளர்களாகவும் இருப்பார்கள்.

இனி நாம் நமது கதைக்கு வருவோம்.

நாம் எவ்வாறு ஞானத்தை வழங்குகிறோம்.

நாம் ஏல விற்பனை சம்பந்தமான ஓர் உதாரணத்தை இதற்குமுன் கூறியிருக்கிறோம்.

நாம் கடையில் கடிகாரம் ஒன்றை வாங்குவதாக வைத்துக் கொள்வோம் அதனை சோதித்து தேர்வுசெய்து பணத்தை செலுத்தி விட்டு கடிகாரத்தை வாங்கி வருகிறோம்.

அந்தக் கடிகாரமும் இரண்டு நாட்கள் நன்றாக ஓடிவிட்டு மூன்றாவது நாள் பழுதடைந்து நின்று விடுகிறது. வாங்கிய கடைக்கே அந்த கடிகாரத்தை எடுத்துச் செல்கிறோம். கடைக்காரர் அதை சீரமைத்து கொடுக்கிறார். அல்லது அதற்குப் பதிலாக புதிய கடிகாரத்தைக் கொடுக்கிறார்.

"கடிகாரத்தை உங்களிடம் விற்றதோடு நமது உறவு முடிந்து விட்டது" என்று அவர் நம்மிடம் கூறுவதில்லை. கடிகாரத்தைப் பெற்ற பிறகும் அவரோடு உள்ள நமது உறவு தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

ஆனால் ஏல விற்பனை என்பது இப்படி யன்று. ஒருவர் ஒரு பொருளை ஏலத்தில் விற்பனை செய்யும் போது "இந்தப் பொருளை இதன் குறை நிறைகளோடு விற்பனை செய்கிறேன்" என்று கூறி தான் விற்பனை செய்கிறார்.

அந்த விற்பனையோடு அவருக்கும் நமக்கும் உள்ள உறவு முடிந்து விடுகிறது.

வாங்கி வந்த பிறகு பழுதாகிவிட்டது என்று கூறி விற்றவரிடம் திரும்பக் கொண்டு செல்ல முடியாது.

நாம் வழங்கும் ஞானமும் இந்த வகையிலேயே அமைந்துள்ளது.

இங்கு எந்தச் சாதனைகளும் நிபந்தனைகளாகக் கொடுக்கப்படவில்லை.

மன அனுபவங்களைச் சீரமைக்க வேண்டிய கடமைகள் எவையும் கொடுக்கப்படவில்லை.

உங்களை உங்களுடைய அனைத்து குறைகளோடு முழு மனதுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதுதான் நமது வழிமுறை.

உங்களை முழு மனதுடன் ஏற்றுக் கொள்கிறீர்களா? அல்லது உங்களை நல்ல நிலையில் சீர் அமைக்க விரும்புகிறீர்களா? என்பது தான் கேள்வி.

"இல்லை, இல்லை என்னை நான் நன்றாக வைத்துக்கொள்ள வேண்டும்" என்று எண்ணுபவர்கள் மட்டுமே நமது அணுகுமுறையைப் புரிந்து கொள்ளாதவர்கள்.

நமது குறை நிறைகளை முழுமனதுடன் ஏற்றுக் கொள்பவர்கள் மட்டுமே அகச்சரணாகதிக்கு வருகிறார்கள்.

நம் அகத்தை-மனதை சீரமைக்க தேவையில்லை என்ற முடிவுக்கு வருவதுதான் ஞானம்.

அப்படி நாம் ஞானம் அடைந்து விட்டோம் என்றால் மறுநாளே நாம் வேறு நபராக மாறி விடுவோமா?

நம்முடைய மனது சுதந்திரமடைந்து விட்டாலும் கூட அதனுடைய இயல்புகள் முற்றிலும் மாறி அமைய சிறிது கால அவகாசம் தேவைப்படும்.

யோக சாதனைகளில் ஈடுபடுவோர் பெரும்பாலும் அடக்குமுறை-நெறிமுறை என்ற பெயரில் தங்களைக் கொன்று வைத்திருப்பார்கள். அரைகுறை உயிரோடுதான் அலைவார்கள்.

அதனால் அவர்களோடு நம்மை ஒப்பிட்டுப் பார்க்கத் தேவையில்லை.

மனதளவில் முழுமனதோடு நம்மை ஏற்றுக் கொள்வதுதான் சரி என்பதைப் புரிந்து கொண்டால் போதும்.

நாம் தொடர்பு கொள்ளும் நபர்களோடு நாம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

அதில் நாம் நிச்சயம் அக்கறை காட்ட வேண்டும்.

அடுத்தவர்களுடன் நாம் கொண்டுள்ள அணுகுமுறையை மறுபரிசீலனை செய்து பார்க்க வேண்டும். நமது உறவு முறைகளை நல்ல முறையில் சீரமைத்துக் கொள்ள வேண்டும்.

நற்பண்புகளை நமது நடத்தை வெளிப்படுத்துவதாக அமைத்துக்கொள்ள வேண்டும்.

அதற்காக அதனையும் ஒரு போராட்டமாக எடுத்துக் கொள்ளக் கூடாது.

அகத்தளவில் நம்மை நமது குறை நிறைகளோடு முழுமையாக ஏற்றுக் கொள்வதை மட்டும் முழுமனதோடு செயல்படுத்த வேண்டும்.

"நமக்கு நாமே திருப்திகரமாக இருக்கிறோமா?"

-இப்படி ஒரு கேள்வி நமக்குள் எழ ஆரம்பித்தாலே நம்மை நாம் முழுமையாக ஏற்றுக் கொள்ள தயங்குவதாக தான் பொருள்.

நாம் வேறு, நமது அனுபவங்கள் வேறு அல்ல.

நமது அனுபவங்கள் தாம் "நான்" என்ற நிலையிலும் செயல்படுகின்றது.

"நாம் எப்படி வேண்டுமானாலும் இருந்து கொள்ளலாம்" என்பதும் "**எனது** அனுபவங்கள் அனைத்தையும் முழுமையாக ஏற்றுக்கொள்கிறேன்" என்பதும் ஒன்று தான்.

**'எனது'** செயல்கள் பொறுப்போடு இருக்கட்டும். **'எனது'** சுய இயக்கமானது-அக இயக்கமானது பொருளற்று இருக்கட்டும். இயற்கையாக இருக்கட்டும்.



# ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு மகிழ்வான அறிவிப்பு



## ஸ்ரீ பகவத் குடில்கள்

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம், பெரிய கவுண்டாபுரம், குடும்பைக்காட்டில் இயற்கை எழில் மிகு ஜருகு மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது.

இங்கு ஒவ்வொரு மாதமும் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களின் ஞான முகாம் நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு ஞானியாக திரும்பிச் செல்கின்றனர்.

மேலும் ஞான முகாமிற்கு வரும் அன்பர்கள் பலர் குடும்பத்துடன் வரவே விரும்புகின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் அனைவரும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதையே விரும்புகிறார்.

ஆனால் குடும்பத்துடன் வரும் அன்பர்களுக்கு தனியறை வழங்கும் அளவிற்கு நம்மிடம் போதிய இடவசதி இல்லை. இதனை பூர்த்தி செய்யும் வகையில் ஐயாவின் ஆலோசனைப்படி நமது அன்பர்களின் விருப்பத்திற்கு இணங்க குடும்பத்துடன் தங்கி செல்ல வசதியான **32 ஸ்ரீ பகவத் குடில்கள் (அறைகளை)** எல்லா வசதிகளுடன் இயற்கை சூழலோடு கட்ட முடிவு செய்துளோம்.

ஒரு மனிதன் இயற்கையுடன் இணைந்து ஆரோக்கியமாக வாழ்வதற்கு மாசற்ற காற்று, தூய்மையான மழை நீர், இயற்கை உரத்தில் விளைந்த இரசாயனமற்ற உணவு இவை அனைத்தும் தேவை. நாமும் இங்குள்ள இயற்கை வளத்தைக் காக்கும் வகையில் பல புதிய பணிகளை செய்து வருகிறோம். தற்போது மழை நீரையே குடிநீராகவும் சமையலுக்காகவும் வருடம் முழுவதும் பயன்படுத்தி வருகிறோம். மேலும் மழை நீரை வீணாக்காமல் நிலத்தடி நீராக சேமிக்கும் வகையில் சில பணிகளை செய்திருக்கிறோம்.

இதனால் இயற்கை வளம் அனைத்தும் ஒருங்கிணைந்த இடமாக நமது ஸ்ரீபகவத் பவன் அமைந்துள்ளது.

மேலும் ஓர் ஞானியின் அருகாமையில் அவருடன் இணைந்து வாழ்வதற்கான வாய்ப்பு கிடைப்பது மிகவும் அரிது. அந்த அரிய வாய்ப்பு இங்கு தங்கிச் செல்லும் அனைவருக்கும் கிடைக்கும்.

ஆதலால் இங்கு அமைக்கவிருக்கும் **32 ஸ்ரீ பகவத் குடில்களை** (32 அறைகள்) தேவையானவற்றை ஆர்வமுள்ளவர்கள் தங்களுடைய பயன்பாட்டிற்கு வாங்கி தங்களது விடுமுறை நாட்களிலும் ஓய்வு நாட்களிலும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதோடு ஞானியின் அருகாமையில் தங்கி அவருடன் உரையாடி ஞானத் தெளிவு பெறுவதற்கும் இயற்கை வளத்தை ரசித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கும் பயன்படுத்திக் கொள்ளவும். இதன் விலையாக ரூ. 5 லட்சம் என நிர்ணயித்துள்ளோம்.

இதில் பங்கெடுத்துக்கொள்வதற்காக பலரும் தங்களது ஆர்வத்தை தெரிவித்துள்ளார்கள்.

தற்போது 32 அறைகளுக்கான கட்டட வரைபடமும் தயாராகி விட்டது.

**கட்டடப் பணிக்கான பூமி பூஜை வருகின்ற நவம்பர் மாதம் 24 ஆம் தேதி ஞாயிறு காலை 11.30 மணிமுதல் 12.00 மணிவரை** நடைபெற உள்ளது.

அதுசமயம் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.


மேலும் விவரங்களுக்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

99942 05880, 97891 65555

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## ஞானம் அடைய நம்முள் அக மரணம் நிகழ வேண்டுமா ?

**கேள்வி :** நம்முடைய நான் என்ற அகங்கார தன்மை அழிந்தால்தான் ஞானத்தை பெற முடியுமா? நம்முள் அக மரணம் நிகழ்ந்தால் மட்டுமே நம்மால் ஞானத்தை அடைய முடியும் என்று கூறுகிறார்கள். அதன் பொருள் என்ன? ஞானம் அடைவதற்கு நான் என்ற தன்மை தான் மிகப்பெரிய தடை என்றும் கூறுகிறார்கள். இந்த நான் என்ற அகங்காரத்திலிருந்து விடுபட்டு ஞானத்தை அடைவது எவ்வாறு?

**பதில் :** நான் என்ற தன்மையை புரிந்து கொள்ள எனது சொந்த அனுபவமே மற்றவர்களுக்கு உதவியாக இருக்கும் என்ற அடிப்படையில் இங்கே பகிர்கின்றேன்.

நான் சில ஆன்மிக அமைப்புகளில் பலவிதமான பயிற்சி முயற்சிகளை என்னுடைய பதினாறு வயது முதல் இருபது ஆண்டுகளாக தொடர்ந்து மேற்கொண்டு வந்தேன்.

ஆன்மிகத்தில் கொடுக்கப்பட்ட எல்லாவிதமான பயிற்சி முயற்சிகளையும் முறையாக சிரத்தையுடன் மேற்கொண்டேன். பயிற்சி மேற்கொண்ட தொடக்கத்தில் நன்றாக இருந்தது. ஆனால் மனப்பயிற்சி கூடிய அளவிற்கு மனஅமைதி மட்டும் ஏற்படவே இல்லை. “ஆன்மிக குருமார்கள் சரியாகத்தான் கூறியிருப்பார்கள். அதை நான் தான் சரியாக கடைப்பிடிக்கவில்லை” என்றுதான் நினைப்பேன். “நான் சரியாக பயிற்சி முயற்சி செய்யாததால் எனக்கு நல்ல பலன் கிடைக்கவில்லை.” என்று எண்ணிக்கொண்டு என்னை நானே சரியில்லை என்ற முடிவுக்குதான் வருவேன். ஒருபோதும் ஆன்மிக குருமார்கள் தவறாக கூறியிருப்பார்கள் என்று எண்ணியதே கிடையாது.

கிட்டத்தட்ட இருபது ஆண்டுகள் தொடர்ந்து பயிற்சி முயற்சி நடைபெற்றது. உடல்நிலையில் மாற்றத்தை உணர்ந்தேன். மனதில் தெளிவு ஏற்படுவதற்கு பதிலாக தேடுதல் தொடர்ந்து நீடித்தது. மன இயக்கத்தின் செயல்பாட்டை என்னால் முழுமையாக புரிந்து கொள்ளவே முடியவில்லை. மிகவும் சலித்துப்போன மன நிலையில் தான் இறுதியாக பகவத்ஐயாவை சந்தித்தேன்.

அவரையும் நேரில் சந்தித்து உரையாடி பிறகுதான் தெளிவு பெற்றேன்.

இனி என்னுள் எனது நான் என்ற அகங்கார தன்மையின் இயக்கத்தை எப்படி புரிந்து கொண்டேன் என்பதை பார்ப்போம்.

பகவத் ஐயாவை சந்தித்த பிறகு தான் முதன் முதலாக சிந்தனை என்பது வேறு சிந்தித்தல் என்பது வேறு என்று இரண்டையும் தனித்தனியாக வேறுபடுத்திப் பிரித்து பார்த்து புரிந்து கொள்ளும் தன்மைக்கு வந்தேன்.

அதாவது சிந்தனை என்பது தாமாக வருவது. சிந்தித்தல் என்பது தாமாக வந்த சிந்தனையை நாமாக சிந்திப்பது என்று புரிந்துகொண்டேன்.

நமக்கு எந்த எண்ண உணர்வும் வருவதற்கு முன்னால் எதுவும் தெரியாது. வந்த பிறகுதான் இந்த எண்ணமோ உணர்வோ வந்துள்ளது என்பதை உணர முடியும் என்பதும் புரிந்தது. எண்ணமோ உணர்வோ வந்து முடிந்து போன தருவாயில் தான் வந்ததை அறியமுடியும்.

எனக்கு பிடிக்காத எண்ண உணர்வுகள் என் மனதில் ஏற்படும்போதெல்லாம் நானே (நான் தன்மையே) பாதிப்பு அடைந்ததாக எண்ணிக்கொள்வேன். பிறகு எனக்கு நானே மனதிற்குள் சொல்லிக் கொள்வேன். “இவை மனதில் தாமாக வருபவை. அவை தாமாக போய்விடும். இதற்கு நாம் எதுவும் செய்யத் தேவையில்லை” என்று எனக்கு நானே கூறிக் கொள்வேன். அப்படி கூறியவுடன் என் மனதில் இருந்த பாரம் அப்படியே நீங்கிவிடும்.

பிறகு இப்படி காலை கண் விழித்தது முதல் இரவு கண் அயரும் வரை என்னை பாதிக்கும் எண்ணமோ உணர்வோ வரும்போதெல்லாம் தொடர்ந்து கூறிக்கொண்டே இருப்பேன். கிட்டத்தட்ட ஒரு நான்கு மாதங்கள் முழுநேர வேலையாகக் எனக்கு நானே சொல்லிகொண்டு இருந்தேன்.

இப்படி காலை விழித்தது முதல் இரவு படுக்கும்

வரை தொடர்ந்துகூறும் வேலையே எனக்கு மிகப்பெரிய வேலையாக இருந்தது.

மனதில் ஏற்படும் எத்தனை வேண்டாத எண்ண உணர்வுகளுக்கு இப்படி தொடர்ந்துகூறுவது?

மனதில் எண்ணமும் உணர்வும் புற்றீசல் போல தொடர்ந்து வந்து கொண்டே இருந்தது. எனது நான் தன்மையால் பாரத்தை தாங்க முடியவில்லை . விடையும் தெரியவில்லை விளக்கம் தேடி, தெளிவைத் தேடி மீண்டும் பகவத் அய்யாவை சந்தித்தேன். "ஐயா உங்கள் வழிமுறையை பின்பற்றி காலை முதல் இரவு வரை இப்படி எனக்கு நானே கூறிக்கொண்டு இருக்கின்றேன். இப்படி எனக்கு நானே கூறிக்கொள்வது மிகப்பெரிய பணியாக இருக்கிறது. இதிலிருந்து நான் எப்படி விடுபட்டு விடுதலை அடைவது. எனக்கு ஏதாவது ஒரு வழியை கூறுங்கள்" என்று கேட்டுக்கொண்டேன்.

அய்யா உடனே "இவை மனதில் தாமாக வருபவை. அவை தாமாக போய்விடும். இதற்கு நாம் எதுவும் செய்யத் தேவையில்லை என்று நீங்கள் கூறுவது தாமாக வருகிறதா? இல்லை நீங்களாக கூறுகிறீர்களா?" என்று கேட்டார்.

நான்கு மாதமாக என்னுள் தொடர்ந்து ஆட்டிப்படைத்துக்கொண்டிருந்த **நான்** என்ற தன்மை எரிமலையாக வெடித்து சிதறி மறைந்தது. எனது தலையில் யாரோ ஒருவர் சுத்தியால் ஓங்கி அடித்தது போல் இருந்தது. அதற்குமேல் எனக்கு எதுவுமே கேட்க தோன்றவில்லை.

மேலும் "உங்கள் மனம் தாமாக செயல்படுகிறது. அதில் எண்ணமும் உணர்வுகளும் தாமாக வெளிப்படுகிறது. நமக்கு எந்த எண்ண உணர்வும் வருவதற்கு முன்னால் எதுவும் தெரியாது. வந்த பிறகுதான் இந்த எண்ணமோ உணர்வோ வந்துள்ளது என்பதை வந்து முடிந்து போன தருவாயில் தான் அறியமுடியும்.

இப்படி முடிந்ததை உணரும் உங்களுடைய நான் தன்மைக்கு அதை நிர்வாகம் செய்யும் எந்த பொறுப்பும், தகுதியும் கிடையாது என்பதை நீங்கள் விளங்கிக் கொண்டால் போதும். உங்கள் நான் தன்மை தன்னுடைய இயலாமையை தானே உணர்ந்து கொண்டு தாமாகவே மறைந்து போய்விடும். ஆதலால் நீங்களாக எதுவும் சொல்லி அனுப்பத்தேவையில்லை." என்று கூறி இதை புரிந்துகொள்ள வேண்டியது உங்களுடைய நான் தன்மைதான் என்பதை விளக்கினார்.

பல மாதமாக இறுகிப் போயிருந்த ஒரு மிக பெரிய பனி மலை எப்படி சூரிய கதிர்கள் பட்டவுடன் உருகி பிரவாகமாக ஓடிக்கொண்டிருக்கும் ஆற்றுடன் தன்னுடைய உருவத்தை இழந்து கலந்துவிடுமோ அதைப்போல நான்கு மாதமாக என்னை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்த நான் என்ற அகங்கார தன்மை புரிதல் என்ற சூரிய கதிர் பட்டவுடன் பிரவாகம் என்ற ஆற்றில் பிரவாகித்து கரைந்து போனது.

பிறகுதான் புரிந்தது நமது நான் என்ற தன்மைக்கு அகத்தில் எந்த ஒரு வேலையும் இல்லை என்பது. மனதில் எண்ணமும் உணர்வும் தாமாக தோன்றி தாமாக மறைகிறது. அதைப்போலவேதான் அதனை உணரும் நான் என்ற உணர்வும் தாமாகவே தோன்றி தாமாகவே மறைகிறது.

தனக்கு ஏற்படும் வேண்டாத எண்ண உணர்வின் மீது ஏதேனும் ஒருவகையில் நான் தன்மை முரண்படுவதால் மட்டுமே நமக்கு வேண்டாத எல்லா எண்ண உணர்வுகளும் பலம் பெற்று பிரச்சனையை ஏற்படுத்திவிடுகிறது. அகத்தை பொறுத்தவரை நமது நான் என்ற தன்மைக்கு எந்த வேலையும் இல்லை என்று முடித்துக் கொள்வது ஒன்று மட்டும்தான் இறுதியான தீர்வு என்பதை உறுதியாக உணர்ந்துகொண்டேன்.

**பல காலமாக மனதையே இரண்டாக பிரித்து எண்ண உணர்வு என்பதை ஒரு பகுதியாகவும் அதற்கு பதில் கூற வேண்டிய அல்லது சரிசெய்யக்கூடிய நான் என்பது மற்றொரு பகுதியாகவும் பிரித்துக்கொண்டு போராடிய போராட்டம் முடிவுக்கு வந்தது. மனதை பொருத்தவரை இரண்டு பிரிவினைகள் என்பது இல்லை. இருப்பது ஒன்று மட்டுமே.**

எண்ணமும் உணர்வும் தாமாக தோன்றி தாமாக மறைகிறது. அதனைத்தொடர்ந்து அதனை உணரும் நான் என்ற தன்மையும் தாமாக தோன்றி மறைகிறது. இப்படி தாமாக தோன்றி மறையும் எண்ண உணர்வுகளை நிர்வாகம் செய்யும் எந்த பொறுப்பும் நமது நான் தன்மைக்கு கிடையாது. தனது இயலாமையை விளங்கிக் கொள்வதே ஞானம் என்பதை புரிந்து கொண்ட பிறகு மனதை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்த நான் என்ற அகங்காரம் தானாகவே வலுவிழந்துபோய் விடுகிறது. அகத்தே வலுவிழந்த நான் புறத்தில் செயலில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டு சரியான செயல்களைச் செய்யும் கலையை கற்றுக் கொள்கிறது.

புறச் செயல்பாட்டில் நம்மையும் மற்றவற்றையும் பிரித்துப் பார்த்து புரிந்துகொண்டு 'நமக்கு என்ன தேவை? மற்றவர்கள் நம்மிடமிருந்து எதை எதிர்பார்க்கிறார்கள்? அவர்களுக்கு நாம் என்ன செய்ய வேண்டும்? அதற்கு நாம் எப்படி செயல்பட வேண்டும்?' என்பதை புரிந்துகொண்டு செயல்படுவதற்காகதான் நமது அகத்தில் இந்த நான் என்ற தன்மையே தோன்றுகிறது. இதை சரியாக புரிந்து கொண்டு செயல்பட்டால் புறச் செயல்கள் சிறப்படையும்.

**"புறச் சூழ்நிலையை சரியாகப் புரிந்துகொண்டு செயல்படுவதற்கே அகத்தில் நான் என்ற தன்மை தோன்றுகிறது. அகத்தை நிர்வாகம் செய்வதற்கு அல்ல".**

# நிகழ்ச்சி நிழல்கள்


மலைப்பாதையில் ஓய்வு



நடை பயிற்சியின் போது ஐயாவுடன் அன்பர்கள்.


ஐயாவின் பிறந்தநாளில் சென்னை அன்பர்களுடன் ஐயா


ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவை சந்திக்க வந்த அன்பர்களுடன் ஐயா


ஜருகு மலையில் பகவத் ஐயாவுடன் அன்பர்கள்


அக இருளைப் போக்கும் ஞான ஒளி...

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

இவ்வுலகில் ஆன்மிகத் தேடலிலுள்ள கோடான கோடிக்கணக்கானவர்களில் வெகு சிலரே ஞானம் அடைந்து இருக்கிறார்கள்.

காரணம் ஞானம் என்பது விளக்க முடியாத ஒன்றாகவும் அதன் விளக்கங்கள் புதிர் போல அமைந்துவிட்டதுமே ஆகும்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் வருகையால் மாபெரும் ஆன்மிக புரட்சியே நடந்து விட்டது. தேடுதல் உள்ள அனைவரும் ஞானம் அடையும் அளவிற்கு எளிதாகி விட்டது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புதிய அணுகுமுறையே (சரியான அணுகுமுறையே) இதற்கு காரணம்.

மனதின் இயக்கத்தை அகம்-புறம் என பிரித்து புரிய வைத்ததே இந்த எளிமைக்கு வித்து.

பக்தியின் முழுமையே சரணாகதி. சரணாகதியே விடுதலையை தரவல்லது.

சரணாகதி என்பது எது நடந்தாலும் எப்படி நடந்தாலும் அதை அப்படியே முழுமையாக ஏற்றுக்கொண்டு சரணடைவது.

சரணாகதி தற்போதைய சூழ்நிலையில் சாத்தியமில்லாத ஒன்றாக இருந்து வந்தது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள், மனதை அகம் - புறம் எனப் பிரித்து புரியவைத்ததால் இதுவும் சாத்தியமான ஒன்றாக மாறிவிட்டது.

மனதில் எத்தனையோ விதமான உணர்ச்சிகள் வந்து போகின்றன.

மகிழ்ச்சி, பயம், வருத்தம், துக்கம், கோபம், ஆசை போன்ற அனைத்து உணர்ச்சிகளும் எண்ணங்களும் அகம் சம்பந்தப்பட்டவை.

புறம் என்பது நமது செயல் சம்பந்தப்பட்டது.

உலகியலில் நாம் ஏதோ ஒரு பொறுப்பில் இருப்போம். தொழில் புரியலாம், வேலையில் இருக்கலாம், ஓர் அதிகாரியாக இருக்கலாம், நாம் என்ன பொறுப்பில் இருக்கிறோமோ அதற்குரிய கடமைகளை நாம் செயல்படுத்தியாக வேண்டும்.

நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைகளும் நாம் ஏற்றுச் செயல்படும் பொறுப்புகளும் கடமைகளும் புறம் ஆகும்.

அகம் - புறம் இவை வேறு வேறாக இருந்தாலும், ஒன்றோடு ஒன்று தொடர்புடையவை. ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து கிடக்கின்றன.

அகத்தினாலும் புறம் பாதிப்படையலாம், புறத்தினாலும் நம் அகம் பாதிப்படையலாம்.

இங்கு நமக்கு எதை சீரமைக்கும் பொறுப்பு உள்ளது?

அகத்தையா? புறத்தையா?

அகம் நம் கட்டுப்பாட்டில் இல்லை என்பதை புரிந்து கொண்டால் மட்டும் போதும். அந்தப் புரிதலே அகச் சரணாகதியை வழங்கிவிடும்.

ஆனால் புறம் அப்படியல்ல. புறப் பிரச்சினையை புரிந்து கொள்வதோடு அதை சீரமைக்கும் கடமையும் நமக்கு உண்டு.

இதை புரிந்து கொள்ளாத வரை நமது ஆற்றல் அகம், புறம் என இரண்டையும் சீரமைக்கும் வேலையில் செயல்பட்டுக் கொண்டிருந்தது.

இவை இரண்டையும் பிரித்துப் புரிந்து கொண்ட நிலையில் முழு ஆற்றலும் புறச் செயலுக்காக பயன்படும் போது நமது செயல் திறன் அதிகரிப்பதோடு வெற்றி ஏற்படுவதற்கான வாய்ப்பும் அதிகரிக்கிறது.

இந்த வகையில் ஞானம் பெற்றவரே அகத்தில் முக்தராகவும் - விடுதலை பெற்றவராகவும் புறத்தில் செயல்வீரராகவும் திகழ முடியும்.

இந்தப் புரிதலைதான் வெவ்வேறு கோணங்களில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஞான முகாம்களில் வழங்கி அனைவரையும் ஞானியாக்கி வருகிறார்கள்.

ஞானத் தேடல் உள்ள பல்லாயிரக் கணக்கானோரை ஞானியாக்கும் மகா ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள். அவர் வாழும் காலத்தில் வாழும் பெருமை நம் அனைவருக்கும் உண்டு.

அதையும் தாண்டி அவரோடு பேசிப் பழகும் வாய்ப்பு பகவத் பாதையில் பயணிக்கும் பலருக்கும் உண்டு.

எளிமையும் உண்மையும் அவரிடம் ஒருங்கே அமைந்து இருப்பது, நாம் அனைவரும் அவருடன் நெருங்கி பழகுவதற்கு மட்டுமல்லாமல் பாமரனையும் ஞானியாக்க இந்த உலகிற்கு இயற்கை கொடுத்த வரமாகும்.

இனிவரும் எதிர்கால சந்ததியினர், தற்போது மக்களிடையே இருக்கும் மன அழுத்தத்தை விட அதிக அளவு மன அழுத்தத்தால் பாதிக்கப்படுவார்கள் என மனோதத்துவ வல்லுனர்கள் கணித்துள்ளார்கள்.

அப்படி பாதிக்கப்படும் அனைவரையும் மன அழுத்தத்தில் இருந்து விடுவித்து காப்பதற்கு தீர்வாக அமைவது ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞான புரிதல் மட்டுமே.

**ஸ்ரீ பகவத் ஐயா அவர்களை அடையாளம் கண்டுகொள்வோர் பாக்கியவான்கள்.**

**நாம் அனைவரும் பாக்கியவான்கள்.**

**பலரையும் பாக்கியவான்களாக மாற்றும் கடமை நமக்கு உண்டு.**

மேலும் சென்ற செப்டம்பர் மாதம் 12 தேதி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் பிறந்த நாளன்று சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் அன்பர்கள் பலர் ஐயாவை நேரில் சந்தித்து ஆசி பெற்று பிறந்த நாளை சிறப்பாக கொண்டாடி மகிழ்ந்தனர்.

தற்போது ஐயா சேலம் ஸ்ரீபகவத் பவனில் தங்கி உள்ளார்கள்.

அக்டோபர் மற்றும் நவம்பர் மாதங்களில் நடைபெறும் ஞான முகாம்களின் விவரங்கள் இவ்விதழில் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் ஜனவரி மாதம் ஆங்கிலத்தில் நடைபெற உள்ள ஞான முகாம் விபரமும் கொடுக்கப்பட்டுள்ளது.

தேடுதல் உள்ளவர்களுக்கு தெரிவித்து அவர்கள் ஞானம் பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**ஞானத்தை புரிந்துகொள்வோம்!**
**புரிதலை பகிர்ந்து கொள்வோம்!**

## ஸ்ரீ பகவத் ஐயாவின் தியான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் வடிவமைக்கப்பட்ட அரிய தியானங்கள்...

நாள் : **9.11.2019** காலை 8.00 மணிமுதல்
**10.11.2019** மதியம் 3.00 மணிவரை

இடம் : ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

குறிப்பு : வெள்ளிக்கிழமை மாலை வந்து தங்கிக்கொள்ளலாம்.

செலவு பகிர்வு
ரூ. **3000/-**
மட்டும்

அக விடுதலைக்கு
**ஞானம்...**

புறச் செயலுக்கு
**தியானம்...**

தியான முறைகள்

**சர்வ ஸ்வரூப தியானம்** | **விகற்ப தியானம்** | **நிர்விகற்ப தியானம்**

நடத்துபவர்கள்

திரு. **சந்திரசேகர்,** திரு. **சரவணன்,** திரு. **ஜீவமணி**

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
**79041 18421, 99942 05880, 97891 65555**

# SCHEDULE OF WORKSHOP ON ENLIGHTENMENT CONDUCTED by Sri Bagavath Ayya

**Date**

**24.01.2020** Morning 11.am to **26.01.2020** Evening 3.00 pm

**Details**

**3 Days Retreat on Enlightenment**
Place : Sri Bagavath Bhavan, Salem

**ENTRY FREE** | **Donations are welcomed**

**For Advanced Registration**
Sri Bagavath Mission : 31, Ramalingasamy Street,
Ammapettai, Salem – 3

**79041 18421, 99942 05880, 97891 65555**



# ஜென் கதை

## "ஒரு கை ஓசை"

ஒரு குடும்பஸ்தன் மிகுந்த மனப் போராட்டத்தில் இருந்தான். அவனது மனம் எப்போதும் அவனை குற்றம் கூறிக்கொண்டே இருந்தது. அவன் அறியாமல் செய்த தவறுகளை சுட்டிக்காட்டிக் கொண்டே இருந்தது. அதனோடு அவன் சதா விவாதம் செய்து கொண்டே இருந்தான். ஆனால் அவன் மனம் தன் வேலையை நிறுத்துவதாக இல்லை. அது மிகவும் கூச்சலாக இருந்தது அவனுக்கு.

அவன் மனதை அமைதிப்படுத்துவதற்காக மனதோடு சதா சண்டையிட்டுக் கொண்டிருந்தான். ஆனாலும் அவன் மனம் ஓய்வதாக இல்லை.

அவன் மனம் அமைதி அடைவதற்காக ஜென்குருவிடம் சீடனாக வந்து சேர்ந்தான்.

குரு அவனுக்கு பல விளக்கங்களைக் அளித்தார்.

ஆனால் அவன் தெளிவு பெற முடியாமல் சந்தேகங்களை கேட்டுக் கொண்டே இருந்தான்.

ஜென் குரு முடிவாக சொன்னார் :

"ஒரு கை ஓசையின் மேல் கவனம் செய்.

எல்லாம் புரிந்துவிடும்."

அவனுக்கு குழப்பமாக இருந்தது. 'ஒரு கையில் எப்படி ஓசை வரும். இரு கைகள் சேர்ந்து தட்டினால் தானே ஓசை வரும்.'

குழப்பத்தோடு மரத்தடியில் அமர்ந்து யோசிக்கலானான்.

ஒன்றும் புலப்படவில்லை.

திடீரென்று மூங்கில் காட்டிலிருந்து ஒரு பறவையின் கூக்குரல் கேட்டது. இதுவாக இருக்குமோ என்று குருவிடம் போய் சொன்னான்.

குரு அவனிடம் "இதுவல்ல ஒரு கை ஓசை... போய் நன்றாக கவனி" என்றார்.

மீண்டும் குடும்பஸ்த்தன் யோசிக்கலானான்.

ஒவ்வொரு நாளும் ஒரு பதிலை கொண்டு போனான்.

மரங்களிடையே செல்லும் காற்றின் ஓசை...

வாய்க்காலில் ஓடும் தண்ணீரின் ஓசை...

வானில் தோன்றும் இடி முழக்கம்...

இப்படி சொல்லச் சொல்ல குரு அவனை இதுவல்ல என்று சொல்லி திருப்பி அனுப்பிக் கொண்டே இருந்தார்.

ஒரு கட்டத்தில் அவன் சொல்வதையே குரு கேட்கவில்லை...

குடும்பஸ்த்தனுக்கு ஒரே வருத்தம். 'நாம் சொல்வதை கூட கேட்காமலேயே இதுவல்ல என்று துரத்துகிறாரே...' என்று மற்ற சீடர்களிடம் கூறி வருத்தப்பட்டான்.

இதன் பிறகு குடும்பஸ்தன் குருவை பார்க்க செல்லவில்லை. சில நாட்கள் கழிந்தன.

அவன் முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றன. அவனால் ஒரு கை ஓசை கேட்க முடியவில்லை. இறுதியாக சலிப்படைந்தான்.

அவன் மனதோடு பேசுவதையும் சண்டையிடுவதையும் கூட நிறுத்திவிட்டான்.

அந்த கணம் புதியதாக ஒன்றை கண்டு பிடித்தான். அவனது மனமும் அவனை குறை கூறுவதிலிருந்தும் பேசுவதில் இருந்தும் விடுபட்டு அமைதி அடைந்திருந்தது.

சில நாட்கள் அப்படியே இருந்து பார்த்தான்.

அவன் மனம் அவ்வப்போது ஏதோ பேசியது. அவன் அதற்கு பதில் கூறுவதில் இருந்து விடுபட்டு இருந்தான்.

மனதின் ஓசையும் மெல்லியதாக தோன்றி மறைந்து கொண்டே இருந்தது. ஆனால் அது அவனுக்கு கூச்சலாக தெரியவில்லை.

குரு அவனைத் தேடி வழக்கமாக அவன் அமர்ந்திருக்கும் மரத்தடிக்கு வந்தார்.

எல்லாவற்றையும் மறந்து குடும்பஸ்தன் மௌனத்தில் மூழ்கியிருந்தான்.

குரு அவனை உலுக்கி சுய நினைவு வரச் செய்து கேட்டார்:

"ஒரு கை ஓசையை கடைசியாக நீயும் கேட்டு விட்டாயா?" என்றார்.

"ஆமாம் சுவாமி நானும் கேட்டு விட்டேன். **போராடாத மனமே ஒரு கை ஓசை** என்று புரிந்து விட்டேன்." என்றான்.

"எப்படி ஒரு கை ஓசையை உணர்ந்து கொண்டாய் என்பதை எனக்கு கொஞ்சம் தெரியப்படுத்துவாயா?" என்றார் குரு.

"என் மனம் என்னிடம் பேசும் அனைத்தும் ஒரு கை ஓசை. நான் அதனோடு விவாதம் செய்தால் அது இரு கை ஓசையாக மாறிவிடுகிறது. அதுவே என் மனக்கூச்சலுக்கும் பிரச்சனைக்கும் மூல காரணமாகிறது இருப்பதை உணர்ந்து கொண்டேன்" என்றான்.

"நீ உணர்ந்து கொண்டதை ஏன் என்னிடம் வந்து சொல்லவில்லை?" என்றார் குரு.

"இந்த ஒரு கை ஓசையில் என்னையும் நான் மறந்து விட்டேன்...

"இப்பொழுதுதான் எனக்கு புரிகிறது. ஏன் என் எந்த பதிலையும் கேட்காமல் என்னை துரத்தினீர்கள் என்று....

"உங்கள் அன்பையும் அக்கறையையும் சாதாரணமானவர்கள் புரிந்து கொள்ள முடியாது" என்று கூறி அவர் பாதம் பணிந்து வணங்கினான்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555